

மலர் : 5
இதழ் : 2
கர்த்தர்
இயேசுவின் மகிமை
வருட சந்தா -ரூ 50
தனி பிரதி -ரூ 4
பிப்ரவரி - 2021
பயப்படாதே!
நான் பெரிய காரியங்களை உனக்கு செய்வேன் - இயேசு

# அப்பா வேண்டாம்! அப்பா கட்டின வீடுதான் வேண்டும்!! அம்மா வேண்டாம்! அம்மாவின் தங்க நகைகள்தான் வேண்டும்!!

இந்தியா தேசத்தின் இணையற்ற இமயமலையை நோக்கி, இரண்டு சாதுக்கள் தவம் புரிந்து, வரம் பெற்று வாழ விரும்பி, புறப்பட்டு சென்றார்கள்.

பல நாட்கள், பலபாடுகளுடன் பயணத்தை தொடர்ந்தார்கள். கடைசியாக இருவரும்,

இமயமலையில் இரண்டு இடங்களைத் தாங்கள் கடும் தவம் புரிய தெரிந்து கொண்டார்கள்.

தனித்தனியாக, தீராத தாகத்துடனும், பல நாட்கள் பசியுடனும் தவம் செய்தார்கள்.

ஒருநாள் தரிசனம் அளித்து, வரம் கொடுக்க வானத்திலிருந்து தேவனும் வந்தார். மெலிந்து போன முதலாம் சாதுவின் முன்நின்று -

"மகனே உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். அவனோ வரம் கேட்காமல் தன்னுடன் வந்த இரண்டாம் சாதுவுக்கு, "ஏதாகிலும் வரம் கொடுத்து விட்டீரோ" என்று கேட்டான்.

இன்னும் வரம் கொடுக்கப்படவில்லை என்பதை அறிந்தவுடன், தரிசனமளித்த தேவனை பார்த்து

இரண்டாம் சாதுவுக்கு கொடுக்கும் வரத்தை இரண்டு மடங்காக எனக்கு தரவேண்டும்" என்று வேண்டிக் கொண்டான்.

இந்த ஆசைக்கு காரணம், மற்ற சாதுவை விட தான் அதிகமான ஆசீர்வாதத்தைப் பெற வேண்டும் என்பதே.

ஆசை அதிகமாகிவிட்டால் அது பயனற்ற பேராசையாக மாறிவிடும் என்பதை பலபேர் அறியவில்லை.

அவரைபோல அடுத்த சாதுவுக்கும் தரிசனம் கிடைத்தது. மகனே நீ விரும்பும் வரத்தை என்னிடம் கேட்டுப் பெற்றுக்கொள் என்று சத்தமும் உண்டாயிற்று.

இவனும் உடனே வரம் கேட்காமல், எடுத்த எடுப்பில், "அந்த சாதுவுக்கு என்ன வரம் கொடுத்தீர்" என்று தன்னுடன் வந்தவரை பற்றி கேட்டான்.

''அவனுக்கு நான் இன்னும் வரம் கொடுக்கவில்லை.

உனக்கு நான் கொடுக்கும் வரத்தை இரண்டு மடங்காக தனக்குத் தரவேண்டும் என்று அவன் என்னை வேண்டிக் கொண்டான்" என்றார் தேவன்.

'அப்படியா? என்னோடு வந்தவனுக்கு என்னைவிட அதிக ஆசீர்வாதமா?

இதை நான் தாங்கிக் கொள்ளமுடியாது. நான் 1000 ரூபாய் கேட்டால் அவனுக்கு 2000 ரூபாய் கிடைத்துவிடுமே.

நான் ஒரு வீடு கேட்டால் அவனுக்கு இரண்டு வீடுகள் கிடைத்துவிடுமே'' என்று சிந்திக்க தொடங்கினான்.

ஆம்! அன்பில்லாத உள்ளத்தில் அநேக சிந்தனைகள் வரும். சோம்பேறியின் உள்ளத்தில் சோதனையான எண்ணங்கள் தோன்றும்.

அதைப்போலவே இந்த சாதுவும் நல்ல எண்ணத்தை விட்டு, கெட்ட சிந்தையுடன், தேவனே கோபம் வேண்டாம்.

தயவு செய்து என்னுடைய ஒரு கண்ணை என்னில் இருந்து எடுத்துவிடும். இந்த ஒரு வரம் போதும் என்று கேட்டுக் கொண்டான். ஏன் தெரியுமா?

தனக்கு ஒரு கண் போனாலும் பரவாயில்லை தன் நண்பனுக்கு இரண்டு கண்களும் போய்விட வேண்டும் என்ற பாவ எண்ணமே காரணம்.

* * * *

அன்பு நம்மை அழ வைக்கிறது. மற்றவர்களின் கண்ணீரைத் துடைக்க நம்மை வாழ வைக்கிறது.

அன்பில் நடக்கிறவன் வெளிச்சத்தில் நடக்கிறான். அன்பு இல்லாதவன்- வெளிச்சம் இல்லாதவன், வெளிச்சம் இல்லாதவன் இருளில் நடக்கிறவன்.

ஆகவே அன்பும் பண்பும் இரு கண்கள், பாசமும் நேசமும் யாரையும் வெல்லும்.

அதாவது உலகத்தையே ஜெயித்து விடும் அன்பு அனைத்திலும் பெரியது.

அன்பில்லாதவன் ஆசீர்வாதத்தைப் பெறுவது எப்படி?

தகப்பனின் அன்பை அறியாமல் தன் இஷ்டம் போல் நடக்கிற மகன் தகப்பனின் ஆசீர்வாதத்தைப் பெறுவது எப்படி?

தாயின் அன்பை அறியாமல் தன் மனம் போல் நடக்கிற மகள் தன் தாயின் ஆசீர்வாதத்தைப் பெறுவது எப்படி?

அன்பில்லாத மகன் எனக்கு அப்பா வேண்டாம், அப்பா கட்டின வீடுதான் வேண்டும் என்று சொல்வான் என்றால்,

அன்பில்லாத மகள் எனக்கு அம்மா வேண்டாம் அம்மா அணிந்திருக்கிற தங்க நகைகள் தான் வேண்டும் என்று சொல்வாள் என்றால்

அப்படிப்பட்ட பிள்ளைகள் வாழ்க்கையில் முன்னேறுவது எப்படி?

அன்பில்லாதவன் தேவனை அறியாதவன் என்று பரிசுத்த வேதாகமம் போதிக்கிறது. ஏன் என்றால் தேவன் அன்பாகவே இருக்கிறார்.







கர்த்தர் இயேசுவின் மகிமை
14/2, திருச்செந்தூர் ரோடு,பாளையங்கோட்டை-627002
KARTHAR YESUVIN MAGIMAI
14/2. TIRUCHENDUR ROAD, PALAYAMKOTTAI - 627 002, TAMIL NADU. Ph: 96551 65569

# கர்த்தர் தடைகளை நீக்கிப்போடுவார்!

## சகோதரியின் அன்பின் கடிதம்

அன்பின் தெய்வம், கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவின் மாறாத பரிசுத்த அன்பினாலே "கர்த்தர் இயேசுவின் மகிமை" ஊழியத்தில் இணைக்கப்பட்டுள்ள அன்பு சகோதர சகோதரிகளே . . .

இவ்வுலகில்- இன்றுவரை, நம்மை உயிரோடு வைத்துள்ள, தேவாதி தேவனின் இரக்கத்தையும், அன்பையும், முன்வைத்து உங்களையும் உங்கள் குடும்பத்தின் மக்களையும் வாழ்த்துகிறேன். தேவன் தாமே உங்களையும், உங்கள் குடும்பத்தார் அனைவரையும், ஆசீர்வதித்து காத்து வழி நடத்துவாராக.

**''தடைகளை நீக்கிப்போடுகிறவர் அவர்களுக்கு முன்பாக நடந்து போகிறார்.... கர்த்தர் அவர்கள் முன்னணியில் நடந்து போவார்''** (மீகா 2:13) என்று பரிசுத்த வேதம் நமக்கு நம்பிக்கை அளிக்கிறது.

பரிசுத்த வேதம் கூறுகிறபடி- இந்த ஆண்டு முழுவதும், கர்த்தர் உங்கள் முன்னே போவார்!

**''இஸ்ரவேல் ஜனங்களை இரவும் பகலும் வழி நடக்கக்கூடும்படிக்கு, கர்த்தர் பகலில் அவர்களை வழி நடத்த மேகஸ்தம்பத்திலும், இரவில் அவர்களுக்கு வெளிச்சங்காட்ட அக்கினிஸ்தம்பத்திலும், அவர்களுக்கு முன் சென்றார்''** (யாத்திராகமம் 13:21) -என்று பரிசுத்த வேதத்தில் நாம் படிக்கிறோம்.

இந்த 2021ம் ஆண்டு முழுவதும், கர்த்தர் உங்கள் முன்னே சென்று, உங்களுக்கு ஏற்படும் தடைகளை எல்லாம் தகர்த்து, உங்கள் வாழ்வில், வரும் நாட்களில் **''கர்த்தர் பெரிய காரியங்களை உங்களுக்கு செய்வார்''**

இந்த 2021ம் ஆண்டில்- தினந்தோறும் நீங்கள் அற்புதங்களை காண்பீர்கள். உங்கள் ஆசீர்வாதத்திற்கு காணப்படுகிற தடைகளை கர்த்தர் உங்களை விட்டு நீக்கிப்போடுவார். உங்கள் மனதில் சமாதானம் இல்லாதபடி

உங்கள் குடும்பத்தில் சமாதான குறைச்சல்களை கொண்டு வரும் பிசாசின் தந்திரங்களுக்கு, உங்களை விலக்கி, சமாதான குறைச்சல்களை உங்கள் குடும்பத்தை விட்டு கர்த்தர் நீக்கிப்போடுவார்.

உங்கள் தொழிலில், வியாபாரத்தில், வேலையில், காணப்படும் வருமான தடைகளை எல்லாம், இந்த ஆண்டு கர்த்தர் உங்களைவிட்டு விலக்கிபோடுவார். நீங்கள் உங்கள் வாழ்வில் உயர்ந்து விடாதபடி,

உங்கள் உயர்வை தடுத்துக் கொண்டிருக்கும் சாத்தானின் சதிகளை எல்லாம், இந்த ஆண்டு தேவன் தகர்த்து போடுவார். **நான் பெரிய காரியங்களை உனக்கு செய்வேன்** என்று சொன்ன கர்த்தராகிய தேவன்,

அன்று- செங்கடலை பிளந்து, இஸ்ரவேல் மக்களுக்கு அதிசயங்களை செய்த தேவனாகிய கர்த்தர், உங்கள் வாழ்வில்- உங்களுக்கு செய்யும் பெரிய காரியங்களையும், அதிசயங்களையும், நீங்கள் இந்த ஆண்டில் காண்பீர்கள். எனவே- **பயப்படாதேயுங்கள்! கர்த்தர் பெரிய காரியங்களை உங்களுக்கு செய்வார்.** ஆமென்.

**அன்பானவர்களே!**

"கர்த்தர் இயேசுவின் மகிமை" ஊழியத்தில், எங்களோடு இணைந்து, தேவனை மகிமைப்படுத்தியும், உங்கள் தினசரி ஜெபத்தில், எங்களுக்காக தேவனை நோக்கி விண்ணப்பம் செய்தும்,

உங்கள் அன்பின் காணிக்கையின் மூலம் "மகிமை" ஊழியத்தை தாங்கி வரும் உங்களை தேவாதி தேவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கண்நோக்கி பார்த்து, உங்களுக்கு பலன் அளிப்பார்.

தேவனுடைய நாமம் மகிமைப்படும்படியாக நீங்கள் செய்து வரும் காரியங்களை தேவன் ஒருபோதும் மறந்து போவது இல்லை. அவர் உங்களுக்கு பதில் அளிப்பார்.

**''நீங்கள் இப்பொழுது இருக்கிறதை பார்க்கிலும் ஆயிரமடங்கு அதிகமாகும்படி உங்கள் பிதாக்களின் தேவனாகிய கர்த்தர் உங்களுக்கு சொல்லியபடியே உங்களை ஆசீர்வதிப்பாராக''** (உபாகமம் 1:11)

**''கர்த்தர்மேல் நம்பிக்கை வைத்து கர்த்தரை தன் நம்பிக்கையாக கொண்டிருக்கிற மனுஷன் பாக்கியவான்''** (எரேமியா 17:7) -என்று பரிசுத்த வேதம் சொல்கிறது. வரும் நாட்களில்-

கர்த்தரின் மேல் மட்டுமே நம்பிக்கை வைத்து, கர்த்தராகிய இயேசுவை நோக்கி பார்க்கிறவர்களாக நாம் இருப்போம் என்றால், நாம் பாக்கியவான்களாகவும் பாக்கியசாலிகளாகவும் இருப்போம்.

எங்களுக்காக, உங்கள் ஜெபங்களில் தொடர்ந்து ஜெபியுங்கள். நாங்களும், உடன் ஊழியர்களும், உங்களுக்காகவும், உங்கள் குடும்பத்தின் பிள்ளைகளுக்காகவும், உங்கள் சுகம், பெலன், ஜீவனுக்காகவும், கர்த்தரிடத்தில் தொடர்ந்து ஜெபிக்கிறோம். **''கர்த்தர் தாமே உங்களை ஆசீர்வதிப்பாராக''** ஆமென்.

கிறிஸ்துவின் பணியில் உங்கள் அன்பு சகோதரி

# கர்த்தர் பெரிய காரியங்களை உனக்கு செய்வார்

தங்களுடைய பொருட்களை தூக்கிக் கொண்டு.

தங்களுடைய பிள்ளைகளோடும், தங்களுடைய வளர்ப்பு பிராணிகளோடும்,

தாங்கள் இதுவரை வாழ்ந்த இடத்தில் இருந்து. தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடிக்கொண்டிருந்தார்கள் இவர்கள்.

இவர்கள் எல்லோரும் முன்னே ஓடிக்கொண்டிருக்க-

இவர்கள் பின்பாக வேறு ஒரு கூட்டம் இவர்களை துரத்திக் கொண்டு வந்து கொண்டிருந்தது.

துரத்தி வருபவர்கள் எங்கே தங்களை பிடித்துக் கொள்வார்களோ? என்றும்-

எங்கே தங்களை எல்லாம் கொன்று போட்டு விடுவார்களோ? என்றும்-

இவர்கள் பயந்து கொண்டே முன்நோக்கி ஓடிக் கொண்டிருந்தார்கள்.

ஓடுபவர்களுக்கும் துரத்துபவர்களுக்குமான இடைவெளி குறைந்து கொண்டே இருந்தது.

என் வாழ்வு முடியப்போகிறதோ?

என் குழந்தைகளின் கதி என்ன ஆகப் போகிறதோ? எல்லாம் முடியப் போகிறதோ? என்கிற பயம்-

## தொடாமல், காத்த தேவன்!

நான் சகோதரிக்கு போன் செய்து பல காரியங்களுக்காக ஜெபிக்க கேட்டுக் கொண்டேன்.

என் மூத்த மகன் கொரோனா வார்டில் தலைமை மருத்துவராக பணியாற்றி வருகின்றார்.

இந்நாள் வரைக்கும் என் மகனை கொரோனா தொடாமல் தேவன் காத்துக் கொண்டார்.

எனது மகள்வழிப் பேத்தியின் திருமண காரியங்களுக்காக ஜெபிக்க கேட்டிருந்தேன்.

ஜெபத்திற்கு பதில் கொடுக்கும் தேவன் என் பேத்தியின் திருமணம் ஒழுங்காக கிருபை செய்தார்.

என் பேரனுக்கு இருந்த வலிப்பு வியாதியை தேவன் 90% குணமாக்கிவிட்டார்.

இந்த வயதான காலத்தில் என்னையும் என் கணவரையும், தேவாதி தேவன் தம்முடைய மகா கிருபையினால் நாள்தோறும் வழிநடத்தி வருகின்றார்.

கர்த்தராகிய இயேசுவின் பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரங்களை ஏறெடுக்கிறேன்.

SIS.குஞ்சம்மா சாமுவேல்
அண்ணாநகர், சென்னை

அங்கே ஓடிக் கொண்டிருந்த அனைவரையும் வருத்திக் கொண்டிருந்தது.

பலவித கேள்விகளோடும், பலவித குழப்பத்தோடும் ஓடிக் கொண்டிருந்த எல்லோரையும் கலங்கச் செய்யும் விதமாக

இப்போது அவர்களுக்கு முன்பாக தடை வந்து குறுக்கிட்டது. அவ்வளவுதான்-

எல்லாம் முடிந்துவிட்டது. நாம் இனி சாகவேண்டியதுதான். இனி முன் நோக்கி செல்ல வேறு வழியே இல்லை.

அவ்வளவுதான் எல்லாம் முடிந்தது என்று அவர்கள் எல்லோரும் கலங்கிப் போனார்கள்.

* * * *

இவ்வுலக வாழ்வில் இன்று அநேகர்-

பலவித பாடுகளாலும், துன்பங்களினாலும், துரத்தப் படுகின்றவர்களாக காணப்படுகிறார்கள்.

அநேக குடும்பங்கள் சமாதான குறைச்சல் என்னும் பிசாசினால் துரத்தப்பட்டு,

சமாதானம் இல்லாமல் தவித்துக் கொண்டிருக்கின்றன.

இன்னும் பல குடும்பங்கள் சாப பிசாசினால் தொடர்ந்து துரத்தப்பட்டு,

கடனில் கிடந்து படாதபாடுபட்டுக் கொண்டிருக்கின்றன.

வியாதி என்னும் பிசாசினால் இன்று பலகுடும்பங்கள் துரத்தப்பட்டு,

வேதனைப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

ஆசீர்வாத குறைச்சலினால் துன்பத்தை தருகின்ற தரித்திர பிசாசினால்,

பல குடும்பங்கள் இன்று படாதபாடுபட்டுக் கொண்டிருக்கிறன்றன.

இப்படி பலவிதமான பாடுகளினால்- இன்று துரத்தப்பட்டுக் கொண்டிருக்கும் குடும்பங்களும், குடும்பத்தின் பிள்ளைகளும், பயப்படும் காரியம்

எங்கே இந்த பாடுகளால் எங்கள் வாழ்வு முடிந்துவிடுமோ?

நாங்கள் படும் இந்த பாடுகள் எங்களை முழுமையாக ஆக்கிரமித்துக் கொள்ளுமோ? -என்ற அச்சத்துடனும் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள்.

* * * *

இஸ்ரவேல் மக்களை எகிப்தின் இராணுவம் துரத்திக் கொண்டு வரும்போது,

இஸ்ரவேல் மக்கள் மேலும் முன்னேறி சென்று விடாமல், அவர்களுக்கு தடையாக செங்கடல் இருந்தது.

இஸ்ரவேல் மக்களை துரத்திக் கொண்டு வந்து கொண்டிருந்தவர்களுக்கு சந்தோஷம் தாங்கவில்லை.

அவ்வளவுதான் இன்னும் கொஞ்சதூரம்





இன்னும் கொஞ்சநேரத்தில் நாம் அவர்களை பிடித்து விடுவோம் என்ற ஆவலுடன்,

செங்கடல் ஓரத்தில், முன்னே செல்ல வழி இன்றி தவித்துக் கொண்டிருந்த இஸ்ரவேல் மக்களை நோக்கி, எகிப்தின் இராணுவம் விரைவாக வந்து கொண்டிருந்தது.

தங்களது ஆபத்தான நிலையை நினைத்து இஸ்ரவேல் மக்கள் கலங்கிப் போனார்கள்.

எங்கே பார்வோனின் இராணுவம் தங்களை அழித்துப்போட்டு விடுவோ என்று மிகவும் பயந்தார்கள்.

கலங்கி நின்ற இஸ்ரவேல் ஜனங்கள் கர்த்தரை நோக்கி கூப்பிட்டார்கள்.

**''தேசமே பயப்படாதே! கர்த்தர் பெரிய காரியங்களை செய்வார்''** -என்று தம்முடைய பிள்ளைகளுக்கு வாக்கு கொடுத்த, பரிசுத்த தேவவாக்கின்படி- அன்று என்ன நடந்தது?

தம்முடைய பிள்ளைகளின் கூக்குரலை கேட்டுவிட்டு கர்த்தர் சும்மா இருந்தாரோ? இல்லையே!

இஸ்ரவேல் ஜனங்கள் தொடர்ந்து செல்ல தடையாக இருந்த செங்கடலை இரண்டாகப் பிளந்து!

தம்முடைய பிள்ளைகள் செங்கடலின் நடுவே நடந்து செல்ல கர்த்தர் வழி ஏற்படுத்தி கொடுத்தார் அல்லவா!

இரண்டு புறமும் பல அடி உயரத்திற்கு கடல் நீர் மதில் போல் நிற்க! அதின் நடுவில்-

பயம் இன்றி நடந்து சென்று இஸ்ரவேல் ஜனங்கள் பார்வோன் சேனைக்கு தப்பித்தார்கள் அல்லவா?

அதோடு மட்டுமல்லாமல்-

இஸ்ரவேலர்களை துரத்திக் கொண்டிருந்த பார்வோனின் இராணுவத்தை கர்த்தர் செங்கடலின் நடுவே கவிழ்த்துப் போட்டார்.

பார்வேனின் இராணுவத்தில் இருந்த ஒருவனாகிலும் உயிருடன் தப்பமுடியாதபடி, கடல் நீர் அவர்களை மூடிக்கொள்ளும்படி கர்த்தர் செய்தார்.

* * * *

அன்பானவர்களே!

எங்களை துரத்திக் கொண்டு வரும் இந்தபாடுகளில் இருந்தும், துன்பங்களில் இருந்தும்,

நாங்கள் தப்பித்துக் கொள்ள முடியாதபடி-

எங்கள் வழிகள் அனைத்தும் அடைக்கப்பட்டுவிட்டதே என்று கலங்குகிறீர்களா?

என்னை பாடாய்படுத்திக் கொண்டிருக்கும் இந்த வியாதியில் இருந்து-

விடுதலை கிடைத்துவிடும் என்று நம்பினேனே!

ஆனால்- இந்த வியாதி குணமாகாது என்று என் நம்பிக்கையின் கதவுகள் அடைக்கபட்டுவிட்டதே!

எனக்கு வந்துள்ள இந்த வியாதியில் இருந்து எனக்கு சுகம் கிடைக்காதோ?

எங்களை தினமும் அழ வைத்துக் கொண்டிருக்கும் இந்த கடன் பிரச்சினையில் இருந்து நாங்கள் தப்பித்து விடலாம் என்று நினைத்தேனே!

ஆனால் அதற்கான வழிகள் எல்லாம் அடைக்கபட்டுவிட்டதே!

இந்த கடன் பிரச்சினையால் எங்கள் வாழ்வு முடிந்துவிடுமோ? என்று கலங்குகிறீர்களா?

பலவித பிரச்சசினைகளின் மத்தியில்- இனி எங்கள் வாழ்வே கேள்விக்குறியாக மாறிவிட்டதே?

இனி நாங்கள் என்ன செய்வோம்?

யாரிடத்தில் போவோம்? என்று மனம் கலங்கி, சமாதானம் இன்றி, பயத்துடனும், துக்கத்துடனும், சஞ்சலத்துடனும், நீங்கள் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள் என்றால்,

**''பயப்படாதேயுங்கள், கர்த்தர் பெரிய காரியங்களை உங்களுக்கு செய்வார்''**

* * * *

தேவனாகிய கர்த்தரை நோக்கிக் கூப்பிடுங்கள்.

அந்நாளிலே இஸ்ரவேலரை எகிப்தியரின் கைக்குத் தப்புவித்து, அவர்களை இரட்சித்த தேவன், உங்களையும் இரட்சிப்பார்.

தடைகளை நீக்கிப் போடுகிற கர்த்தர் உங்கள் முன்னே செல்கிறார்.

உங்களுக்கும், உங்கள் குடும்பத்தின் பிள்ளைகளுக்கும், ஏற்படும் தடைகளை எல்லாம்-

நீக்கிப் போடுவதற்காகவே இந்த ஆண்டில்

## சாட்சியாய் இருக்கிறீர்களா?

* நீங்கள் இயேசு கிறிஸ்துவுக்கு சாட்சியாய் இருக்கிறீர்களா?
* நீங்கள் இயேசு கிறிஸ்துவை பின்பற்றுகிறீர்களா?
* நீங்கள் இயேசு கிறிஸ்துவின் பரிசுத்த நாமத்தை மகிமைப்படுத்துகிறீர்களா?
* நீங்கள் இயேசு கிறிஸ்துவின் சுவிசேஷத்தை சாட்சியாக அறிவிக்கிறீர்களா?
* கிறிஸ்து எனக்கு ஜீவன் சாவு எனக்கு ஆதாயம் என்கிறீர்களா?
* இயேசு கிறிஸ்துவின் மகிமைக்காக மாத்திரம் ஊழியம் செய்வேன் என்கிறீர்களா?
* எனக்காக மரித்த இயேசு கிறிஸ்துவுக்காகவே வாழ்வேன் என்கிறீர்களா?
* எனக்காக மரித்த இயேசு கிறிஸ்துவுக்காக மரிக்க ஆயத்தமாய் இருக்கிறேன் என்கிறீர்களா?
* அப்படி என்றால் நீங்கள் இயேசு கிறிஸ்துவுக்கு சாட்சிகளாக இருப்பீர்கள். ஆமென்! அல்லேலூயா!

உயிர்த்தெழுந்த இயேசு கிறிஸ்துவின் கடைசி வார்த்தைகள் இவைகள். "நீங்கள் எனக்கு, (இயேசுவாகிய எனக்கு) சாட்சியாய் இருப்பீர்கள்" -என்றார்.

கர்த்தர் உங்கள் முன்னே போகிறார்.

அன்று இஸ்ரவேல் ஜனங்களின் முன் கர்த்தர் சென்றபடியினால் செங்கடல் இஸ்ரவேலர்களை தடுத்து நிறுத்த முடியவில்லை.

இன்று, உங்கள் வாழ்க்கையில் ஏற்படும் அனைத்துவித தடைகளையும் கர்த்தர் உங்களை விட்டு நீக்கிப் போடுவார்.

இந்த ஆண்டில் மிகப் பெரிய அதிசயங்களை கர்த்தராகிய இயேசு உங்களுக்கு செய்வார்.

**ஆம் பிரியமானவர்களே!**

நீங்கள் தடைகளை நினைத்து பயப்படாதீர்கள்!

உங்களை துரத்தி வரும் பிரச்சினைகளை நினைத்தும் கலங்காதீர்கள்!

இயேசுவே எங்களுக்கு உதவி செய்யும் என்று கர்த்தராகிய இயேசுவை நோக்கி கூப்பிடுங்கள்!

தம்மை நோக்கி கூப்பிடுபவர்களை பார்த்து பயப்படாதே!

நான் பெரிய காரியங்களை உனக்கு செய்வேன் -என்று கர்த்தராகிய இயேசு கூறுகிறார்.

**"இப்பொழுதும் கர்த்தர் உங்கள் கண்களுக்கு முன்பாகச் செய்யும் பெரிய காரியத்தை நின்று பாருங்கள்"** (1 சாமுவேல் 12:16)

# இடத்தை விற்றுவிடலாமா?

என் அக்கா ராணி கடந்த வருடம் நிலம் வாங்கி வீடு கட்ட ஆரம்பித்தார்கள். இடையில் ஏகப்பட்ட தடைகள் பிரச்சினைகள் ஏற்பட்டு, வீடு கட்டும் வேலையானது அஸ்திபாரத்துடன் நின்று விட்டது.

ஒரு வருடம் முழுவதும் எந்த வேலையும் நடைபெறவில்லை. இடத்தை விற்றுவிடலாமா என்றுகூட யோசித்தோம். அப்புறம் கண்ணீரோடு ஆண்டவரே அற்புதம் செய்யும்.

நாங்கள் கர்த்தர் இயேசுவின் மகிமையில் சாட்சி எழுதுவோம் என்று பொருத்தனை செய்து நாங்கள் மிகுந்த பாரத்துடன் ஜெபித்தோம். ஆண்டவர் எங்கள் ஜெபத்தை கேட்டு

நல்லபடியாகவும் அருமையாகவும் வீட்டை கட்டி தந்தார். வீடு பால் காய்ச்சும் வைபவம் நடைபெறும் நாளான டிசம்பர் 6ம் தேதிக்கு முந்தின நாள் டிசம்பர் 5ம் தேதி வரை மழை பெய்து கொண்டிருந்தது.

எங்கள் ஜெபத்தை கேட்டு இயற்கைக்கு அப்பாற்பட்ட அதிசயங்களை செய்த தேவன் மழையை நிறுத்தி டிசம்பர் 6ம் தேதி வெயிலடிக்க கிருபை செய்தார். பால் காய்ச்சும் வைபவத்தை சிறப்பாக நடத்தி தந்தார்.

என் தேவனுக்கு கோடான கோடி ஸ்தோத்திரங்கள்.

SIS.V.ஜெலின் ஸ்டெல்லா
தேவதானப்பட்டி, தேனி.

# தேவை - இல்லை

**தேவை-**

தேவனை துதிக்கும் தாழ்மை-
பிசாசை எதிர்க்கும் வல்லமை-
மன்றாடி ஜெபிக்கும் தன்மை-
முழுமனதோடு ஜெபிக்கும் தன்மை-

**இல்லை-**

நம்மை பிசாசு தொடுவதில்லை!
நம்மை வியாதி தொடுவதில்லை!
நாம் விழுந்து போவதில்லை!
நம் குடும்பம் அழிவதில்லை!

# நாட்டில் நடக்கும் செய்திகள்

* இந்தியாவின் மிகப் பெரிய கார் தயாரிப்பு நிறுவனமான மாருதி சுஸுகி நிறுவனம் ஜனவரி மாதம் முதல் தனது கார்களின் விலை உயர்வை அறிவித்துள்ளது. அதைத் தொடர்ந்து மற்ற முன்னணி கார் தாயரிப்பு நிறுவனங்களும் தங்கள் கார்களுக்கு விலை உயர்வை அறிவித்துள்ளன.
* கடந்த 2020 டிசம்பர் மாத இறுதி வரையில் மொத்தம் 56.70 லட்சம் பேருக்கு ரூ.14.210 கோடி பி.எஃப் பணம் வழங்கப்பட்டுள்ளது.
* நாட்டின் முன்னணி ஐடி நிறுவனங்களான டி.சி.எஸ், இன்போசிஸ், விப்ரோ, ஹெச்சி எல் ஆகிய நிறுவனங்கள் 2021-2022ம் நிதி ஆண்டில் சுமார் 91,000 பேரை புதிதாக பணியில் சேர்க்க முடிவு செய்துள்ளது.
* சீனாவின் 2வது மிகப் பெரிய ஸ்மார்ட்போன் தயாரிப்பு நிறுவனமான சியோமி சீனராணுவத்துடன் தொடர்புடையது என அறிவித்து கடந்த ஜனவரியில் டிரம்ப் தலைமையிலான அமெரிக்க அரசு சியோமிக்கு அமெரிக்காவில் தடை விதித்துள்ளது.

# இயேசுவின் ஆசை-பிசாசின் ஆசை

நல்ல குடும்பங்களை நாசமாக்க பிசாசுக்கு ஆசை
நல்ல குடும்பங்களை ஆசீர்வதிக்க இயேசுவுக்கு ஆசை
ஜெபவீரர்களை பெலவீனராக்க பிசாசுக்கு ஆசை
ஜெபவீரர்களை பெலப்படுத்த இயேசுவுக்கு ஆசை
தேவ ஊழியங்களை தாறுமாறாக்க பிசாசுக்கு ஆசை
தேவ ஊழியங்களை பெருகவைக்க இயேசுவுக்கு ஆசை
பரிசுத்த ஊழியர்களை பாவியாக்க பிசாசுக்கு ஆசை
பரிசுத்த ஊழியர்களை பரலோகம் சேர்க்க இயேசுவுக்கு ஆசை

"சத்துருவினுடைய சகல வல்லமையையும் மேற்கொள்ளவும் உங்களுக்கு அதிகாரங் கொடுக்கிறேன். ஒன்றும் உங்களை சேதப்படுத்த முடியாது" (லூக்கா 10:19) -இயேசு சொல்கிறார்.





# கண்களுக்கு மறைவான பாவம்!

அன்று- பாவம் தேவனால் படைக்கப்பட்ட ஆதாமை, தேவனிடத்தில் இருந்து பிரித்து விட்டது.

இன்றும்- பாவம் அநேகம் பேர்களை தேவனிடத்தில் இருந்து பிரித்துக் கொண்டிருக்கிறது.

பிசாசின் தந்திரத்தினால் தங்களை படைத்த தேவனுடைய வார்த்தையை மறந்து போனவர்களாக-

ஆதாமும், ஏவாளும் தேவனுக்கு விரோதமாக பாவம் செய்தார்கள்.

அன்று பாவம் செய்த ஆதாமும் ஏவாளும் ஒன்றை மறந்து போனார்கள். ஆம்-

தங்களை படைத்த தேவனுடைய கண்களுக்கு தப்பமுடியாது என்பதை மறந்து போனவர்களாக காணப்பட்டார்கள்.

இன்றும் பலர் பாவத்தை ரகசியமாக செய்யும் போது தங்களை ஒருவரும் பார்ப்பது இல்லை.

"யாருடைய கண்களுக்கும் தெரியாதபடி மறைவில் தானே இப்பாவத்தை செய்கிறேன் என்று நினைக்கிறார்கள்"

அந்த சமயங்களில், பாவத்தை செய்து கொண்டிருக்கும் அவர்களை சுற்றி தேவனும், தேவதூதர்களும் மாத்திரம் அல்ல.

இறந்து போன அவர்களுடைய உறவினர்களும் நண்பர்களும் அவர்களை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்,

-என்கிற ரகசியத்தை சாது சுந்தர் சிங்கிடம் இமயமலையில் வசிக்கும் கைலாச மகாரிஷி அவர்கள் வெளிப்படுத்தினார்.

சரீரத்தை விட்டு ஆவியில் எங்கும் சுற்றக்கூடிய கிருபையையும் பரிசுத்தவான்களின் தொடர்பையும் பெற்றிருந்த கைலாச மகாரிஷி,

ஆவியில் உலகம் முழுவதையும் சுற்றுவதுடன், சில நேரங்களில் மோட்சத்திற்கு போகும் அனுமதியையும் பெற்றிருந்தார்.

இதுபற்றிய பல நிகழ்ச்சிகளை சாது சுந்தர் சிங்கிடம் கைலாச மகாரிஷி மிக விளக்கமாக கூறி உள்ளார்.

* * * *

ஒருவன், ஒரு சமயம், ஓர் அறையில், ரகசியமாக அருவருக்கத்தக்க பாவத்தை செய்து கொண்டிருந்தான்.

யாரும் தன்னை பார்க்கவில்லை என்று அவன் எண்ணிக் கொண்டிருந்தான். இருந்தபோதிலும் நான் ஆவியில் அந்த இடத்தை அடைந்தேன்.

அப்போது தங்கள் வாழ்க்கையை தெய்வ பக்தியில் கழித்த அவனுடைய மூத்த சகோதரனும் பாட்டியும், அவர்களோடு-

தேவதூதர்களின் ஒரு கூட்டமும், அந்த காட்சியை கண்டு கண்ணீர் விடுவதையும்,

தங்கள் உறவினனாக இருப்பதற்கே தகுதி இல்லாத, அவனுக்காக பரிதாப படுவதையும் கண்டேன்.

சிறிது நேரத்தில், அந்த மனிதனுடைய பாவத்தின் அருவருப்பு அவர்களை அந்த இடத்தில் இருந்து துரத்திவிட்டது.

இதன் மூலம்- நம்முடைய கெட்ட செயலின் மூலமாகவும், நாம் செய்கின்ற பாவத்தினாலும், தேவனை மட்டும் அல்ல,

தேவதூதர்களையும், இறந்துபோன நம்முடைய உறவினர்களையும் வேதனைப்படுத்துகிறோம்.

இந்த ஆவிகள் மனித உருவில் தோன்றுவதற்கு அனுமதி கிடையாது.

எனவே- ஒருவன் பாவத்திற்கு இடம் கொடுப்பதை அவர்கள் பார்க்கும்போது, சாமுவேலின் ஆவியை போல அதிகமாக வருத்தப்படுகிறார்கள்.

பாவத்தின் அருவருப்பை காண சகிக்காமல், அவர்கள் அந்த இடத்தை விட்டு விலகிச் சென்றுவிடுவதோடு மட்டுமல்லாமல்,

# வீட்டில் கேட்க வேண்டிய சத்தம்!

இயேசுவை நோக்கி ஜெபிக்கும் சத்தம்!
இயேசுவை துதித்து பாடும் சத்தம்!
இயேசுவை பாடிப் போற்றும் சத்தம்!
பரிசுத்த வேதத்தை வாசிக்கும் சத்தம்!
பரிசுத்த வசனங்களை விளக்கும் சத்தம்!
காலை மாலை குடும்பஜெப சத்தம்!

# நான் யாரை பிரியப்படுத்துவது?

மனிதனை பிரியப்படுத்துவதா?
தேவனை பிரியப்படுத்துவதா?
மனிதனை பிரியப்படுத்துகிறேனா?
தேவனை பிரியப்படுத்துகிறேனா?

* * * *

மற்றவர்கள் உலக பொருளுக்காக மனிதனை பிரியப்படுத்தலாம்?
உலக வாழ்வுக்காக மனிதனை மகிமைப்படுத்தலாம்?
ஆனால் நானோ பரம பொருளுக்காக தேவனையே பிரியப்படுத்துவேன்?
பரலோக வாழ்வுக்காக தேவனையே மகிமைப்படுத்துவேன்?

நியாயத் தீர்ப்பின் நாளில், மனிதர்களுடைய பாவங்களுக்கு கண்கண்ட சாட்சிகளாக நின்று,

அவர்களின் முகத்திற்கு எதிராக நின்று அவர்களை குற்றம் சாட்டுவார்கள்.

அதேநேரம்- உண்மையுள்ள ஊழியர்களை சுற்றிலும், பரிசுத்தவான்களாவது, தேவதூதர்களாவது, எப்போதும் சூழ்ந்து இருப்பார்கள் -என்று கூறிய மகாரிஷி,

அதற்கு எடுத்துக்காட்டாக, நடைபெற்ற வேறொரு சம்பவத்தை சாது சுந்தர்சிங்கிடம் கூறத் தொடங்கினார்.

* * * *

"பிட்ஸ்பர்க்" நகரத்தில் பாவத்தோடு போர்புரிந்து கொண்டிருந்த ஒரு மனிதனை கண்டேன்.

அவன் சில சமயம் பாவத்திற்கு இணங்கிவிடுவான் போல இருந்தது. ஆனால்-

அந்த மனிதன்- தன்னுடைய கடும் ஜெபத்தினாலும், விடாமுயற்சியினாலும் பாவத்திற்கு எதிர்த்து நின்று, கடைசியில் வெற்றியும் பெற்றான்.

அதைப்பார்த்து- அவனை சுற்றி ஆவியில் நின்று கொண்டிருந்த இறந்துபோன அவனுடைய உறவினர்கள் சிலரும், பல தேவதூதர்களும்,

"நமது ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் மூலமாய் ஜெயம் கொடுத்த தேவனை" துதித்துக் கொண்டிருந்தார்கள்.

இதன் மூலம்- மனிதர்களுடைய ஒவ்வொரு செயலும் தேவனாலும், தேவதூதர்களாலும், இறந்துபோன உறவினர்களின் ஆவிகளாலும், எப்படி கவனிக்கப்படுகிறது என்பதையும்,

மனிதன் பாவத்திற்கு இணங்கி பாவம் செய்வதினாலும், மனிதன் பாவத்திற்கு விலகி பாவம் செய்யாமல் இருப்பதினாலும்,

இறந்து போன உறவினர்களுக்கும், பரிசுத்தவான்களின் ஆவிகளுக்கும், எப்படி மகிழ்ச்சியையும் வேதனையையும் உண்டாக்குகிறான் என்பதையும் நாம் அறிந்து கொள்ளலாம்.

* * * *

''மறைவான குற்றங்களுக்கு என்னை நீங்கலாக்கும்'' (சங்கீதம் 19:12)

''துணிகரமான பாவங்களுக்கு உமது அடியேனை விலக்கிக் காரும். அவைகள் என்னை ஆண்டு கொள்ள ஒட்டாதிரும்.

அப்பொழுது நான் உத்தமனாகி பெரும்பாதகத்துக்கு நீங்கலாய் இருப்பேன்'' (சங்கீதம் 19:13)

## தானாக வெளியே வந்தது!

எனக்கு இரண்டுமுறை கடுமையான உடம்பு வலியுடன் குளிர் காய்ச்சல் ஏற்பட்டது. அப்போது எனக்கு சிறுநீர் கழிப்பதிலும் கஷ்டம் ஏற்பட்டது.

கர்த்தரின் நாமத்தில் சாட்சி கூறுவதாக நான் ஜெபித்த போது எனக்கு பூரண சுகம் கிடைத்தது. கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக.

என் மகள் சிறுநீரகத்தில் கல் ஏற்பட்டு வலியினால் கஷ்டப்பட்டாள். கர்த்தரின் பெரிதான கிருபையால் சிறுநீரகத்தில் இருந்த கல் தானாக வெளியே வந்துவிட்டது.

மகளுக்கு சுகமும் கிடைத்தது. கர்த்தர் அருளின நன்மைக்காக எண்ணி முடியாத ஸ்தோத்திரம் செலுத்துகிறோம்.

**SIS.J.மலர்விழி**
**திசையன்விளை**

## இருட்டில் இருந்தவர்களை ஒளியில் நடத்தியவர்கள்

கல்வி அறிவில் பின்தங்கியவர்களாக தேவனாகிய இயேசு கிறிஸ்துவை அறியாதவர்களாய்,

பல்வேறு சடங்காச்சாரங்கள். மூட நம்பிக்கைக்கு மத்தியில் சிக்கியவர்களாக, வாழ்ந்து கொண்டிருந்தவர்களை மீட்க வேண்டும் என்ற விருப்பம் கொண்டு,

அவர்களுக்கு இயேசுவின் அன்பை போதித்து, தங்கள் வேர்வையையும் இரத்தத்தையும் சிந்தி,

பல்வேறு கல்வி நிறுவனங்களை நிறுவி, மக்களுக்கு கல்வி அறிவை போதித்து, இருட்டில் இருந்தவர்கள் ஒளியில் நடக்க உதவிய,

அன்றைய- ஆங்கிலேய மிஷனெரிகளால் கட்டமைக்கப்பட்ட CSI நெல்லை திருமண்டலமானது, சமீப காலங்களில் பல்வேறு விரும்பத்தகாத நிகழ்வுகளால் பாதிப்படைந்தது.

இந்த நிலையில் நெல்லை திருமண்டலத்திற்கு பிப்ரவரி மாதம் 7ம் தேதி தேர்தல் தொடங்குகிறது.

பல கட்டங்களாக நடைபெறும் இந்த தேர்தல் மூலம், சபை கிறிஸ்துவுக்குள் மீட்படையவும், சபையின் சொத்துக்கள் காக்கப்படவும், கல்வி நிலையங்களிலும், ஆலயங்களிலும்,

கர்த்தருக்கு விரோதமான முறைகேடுகள் நடைபெறாமல் இருக்கவும், அரசியல் கட்சிகளை சேர்ந்தவர்கள் சபைக்குள் ஆதிக்கம் செலுத்தாமல் இருக்கவும்,

யாத்திராகமம்- 18:21ன்படி தகுதி உடையவர்களும், பரிசுத்த தேவனுடைய சித்தத்தின்படி செய்பவர்களும் மட்டுமே, திருமண்டல தேர்தலில் தேர்ந்தெடுக்கப்படவும்,

நீங்கள்- உங்கள் குடும்ப மற்றும் தனி ஜெபங்களில், மிகுந்த பாரத்தோடு ஜெபியுங்கள்.

ஜெபத்தை கேட்கும் தேவன், அவர் தமக்காக தேர்ந்தெடுத்தவர்களை தம்மிடத்தில் கூட்டிச் சேர்ப்பாராக - ஆமென்.





# இன்று நம் குடும்பத்தில் நடப்பது என்ன?

*சென்ற இதழ் தொடர்ச்சி....*

நான் சாந்தமும், மனத்தாழ்மையுமாய் இருக்கிறேன். என் நுகத்தை உங்கள் மேல் ஏற்றுக்கொண்டு என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்.

அப்பொழுது உங்கள் ஆத்துமாக்களுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும். (மத்தேயு 11:29,30) -என்று சொன்ன இயேசு அல்லவா?

உங்கள் ஆத்துமாக்களை உங்கள் பொறுமையினால் காத்துக் கொள்ளுங்கள் (லூக்கா 21:19) -என்று சொன்ன இயேசு கிறிஸ்துவின்

பொறுமையும், தாழ்மையும், சாந்தமும் அல்லவா. சீஷர்களின் இணைந்த வாழ்வுக்கும் ஊழியத்துக்கும் காரணமாக இருந்தது.

இயேசு உயிரோடு உலாவிய போது, இயேசுவின் நற்குணங்களால்,

இப்படி ஒன்றாக வாழ்ந்த சீஷர்கள், இயேசு சிலுவையில் அடித்து கொலை செய்யப்பட்ட பின்பு பிரிந்து சென்று விட்டார்களோ?

அவரவர் குணத்திற்கு ஏற்ப நடந்து, ஒருவரோடு ஒருவர் சண்டை போட்டுக் கொண்டார்களோ?

இயேசு மனித சரீரத்தில் அவர்களோடு வாழ்ந்த போது இருந்ததை காட்டிலும்,

இயேசு தனது சரீரத்தோடு மேலே வானத்துக்கு எடுத்துக்கொள்ளப்படட பின்பு,

இந்த சீஷர்கள் எவ்வளவு ஒற்றுமையாக இருந்திருக்கிறார்கள்? எத்தனை திடமனதோடு தேவனுடைய ஊழியத்தை செய்து இருக்கிறார்கள்.

அவர்கள் ஒவ்வொருவருடைய குணங்களையும் வைத்து பார்த்தால், இயேசு அவர்களை விட்டு பிரிந்து சென்ற பின்பு,

அவர்களும்- ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்து சென்று இருக்க வேண்டுமே?

தங்கள் பலவகை குணங்களால் சண்டைபோட்டு ஒருவரை ஒருவர் அடித்து இருக்க வேண்டுமே!

ஆனால், அப்படி நடக்கவில்லையே? அதற்கு பதிலாக- முன்பை காட்டிலும் மிக ஒற்றுமையாக! மிக அன்பாக இருந்தார்களே! இது எப்படி முடிந்தது?

இயேசு சொன்னார்? நான் போய் தேற்றரவாளனை உங்களிடத்தில் அனுப்புவேன்.

சத்திய ஆவியாகிய அவர் வந்து சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார், உங்கள் பாவத்தை குறித்து உங்களை கண்டித்து உணர்த்துவார் (யோவான் 16) -என்று இயேசு அறிவித்து போன,

தேற்றரவாளனாகிய பரிசுத்த ஆவியானவர் இந்த சீஷர்களின் இருதயங்களில் தங்கி இருந்தது தான் அவர்களின் இந்த ஒற்றுமைக்கு காரணம்.

பரிசுத்த ஆவியானவர் இந்த சீஷர்களின் உள்ளங்களில் வாசம் பண்ணியதுதான், அவர்களுடைய உன்னத ஊழியத்துக்கு காரணம்!

இன்று நம் குடும்பங்களில் நடப்பது என்ன?
கிறிஸ்தவன் என்கிறோம்!
இயேசுவை தேடுகிறோம் என்கிறோம்!
இயேசு என்னோடு இருக்கிறார்!
-என்று சாட்சி சொல்கிறோம்! மகிழ்கிறோம்!

ஆனால்- இயேசுவின் அன்பு நமக்கு இல்லையே?

இயேசு என்னிடம் கற்றுக் கொள்ளுங்கள் என்று சொன்ன- சாந்தமும், மனத்தாழ்மையும், நம்மிடத்தில் இல்லையே?

இயேசுவின் பிள்ளைகள்! -என்று சொல்லிக் கொள்கிறவர்களிடம், இயேசு அனுப்பிய தேற்றரவாளன் இல்லாததே இதற்கு காரணம் ஆகும்.

இயேசு அருளிய- பரிசுத்த ஆவியானவர், இவர்களிடம் வாசம் பண்ணாததே!

இதற்கு காரணம் ஆகும்.

இயேசு பிரிந்து சென்ற பின்பு -சீஷர்களை சகல சத்தியத்திற்குள்ளும் நடத்திய, பரிசுத்த ஆவியானவர் இவர்களோடும் இருப்பார் என்றால்-

இவர்கள் குடும்பங்களில்- சண்டை வராது! பிரிவினை ஏற்படாது! குழப்பங்களும், கலக்கங்களும் உண்டாகாது!

உண்மையிலேயே, பரிசுத்த ஆவியானவர் இவர்கள் இருதயங்களில் தங்கி இருப்பார் -என்றால்

## விமானத்தில் பயணம் பண்ணமுடியாது!

என் அக்கா மகனுக்கு கொரோனா வியாதி வந்தது. இரண்டு நாள் கழித்து ஊருக்கு வரவேண்டும் எனவே திரும்பவும் கொரோனா பரிசோதனை செய்ய வேண்டும்.

கொரோனா இருந்தால் விமானத்தில் பயணம் பண்ண முடியாது. எனவே கொரோனா பரிசோதனை செய்யும் போது நெகடிவ் என்று ரிசல்ட் வந்தால் நாங்கள்

கர்த்தர் இயேசுவின் மகிமையில் சாட்சி எழுதுவோம் என்று பொருத்தனை செய்து கர்த்தரிடம் குடும்பமாக ஜெபித்தோம்.

எங்கள் ஜெபத்தை கேட்டு இயேசப்பா கொரோனா நெகடிவ் என்று ரிசல்ட் வரவும் எந்தவித தடையும் இல்லாமல் விமானத்தில் பயணம் செய்து ஊருக்கு வந்து சேரவும் உதவினார்.

கர்த்தராகிய இயேசுவுக்கே மகிமை உண்டாவதாக.

**Bro. ரசல் தம்பிரா**
**வாணியம்பா**



# வேதபுதையல்



## டிசம்பர்-20 வேதபுதையல் வினாவிற்கு விடை எழுதியவர்கள்

**நெல்லை மாவட்டம்:** (1) சாந்திராஜன் - ம.பி.நகர். பாளையங்கோட்டை, (2) ஜீவா டேனியல் மெய்ப்பொருள் தாஸ் - காமராஜ் நகர். பாளை. (3) ஜாய் கிறிஸ்டியான் - பழைய மிலிட்டரி லைன். பாளை. (4) அன்பு டேனியல் - ஏர்வாடி, நெல்லை, (5) பிரேமா ரூத் - கே.டி.சி.நகர், (6) ராஜவல்லி ராஜசேகர் - உதயா நகர், (7) செல்வராஜ் சாலமோன் - வள்ளியம்மாள்புரம், (8) பூமணி இஸ்ரவேல் - பர்கிட்மாநகர், (9) ஜேஸ்மின் ஜேக்கப் - இட்டேரி, (10) பொன்னுராஜ் -சிந்துபூந்துறை, (11) சந்திரா - என்.ஜி.ஓ.பி.காலனி, (12) கிளாடீஸ் ஜெசி - என்.ஜி.ஓ.ஏ.காலனி, (13) லலிதா செல்லத்துரை - ஜெயா நகர், (14) சுகுணா பொன்ராணி - தென்காசி, (15) ஜோதிஜெயசிங் - தட்டான்குளம், (16) சரோஜினி மோசஸ் - டோனாவூர், (17) ஜாய் மேத்யூ - விக்கிரமசிங்கபுரம், (18) ராஜசெல்வி சாமுவேல் - கோபாலசமுத்திரம், (19) பாலா சாமுவேல் - காந்திநகர், (20) பாஸ்கரன் சாமுவேல் - என்.ஜி.ஓ.ஏ.காலனி, (21) வைலட் கிறிஸ்டோபர் - தளவாய்புரம், **தூத்துக்குடி மாவட்டம் :** (22) ஹெப்சிபா தேவராஜ் - குளத்துக்குடி, (23) குளோரி ஜோன் - கோவில்பட்டி, (24) அன்னத்தாய் ஆல்பர்ட் - மெஞ்ஞானபுரம், (25) லீலா மனோகரன் - பால்பாண்டிநகர், (26) ஜெயசீலி காமராஜ் - திருப்பணி செட்டிகுளம், (27) ஞானவரம் ஜெயசிங் - நாசரேத், (28) மரியாள் - டூவிபுரம், (29) அந்தோணி அம்மாள் - கலுங்குவிளை, (30) சுந்தரிபாய் - டூவிபுரம், (31) மனோகரம் ஜாண்சன் - நாசரேத், (32) எபனேசர் மனுராஜ் - உடன்குடி, (33) இளவரசன் இம்மானுவேல் - நாசரேத், (34) ஜெபா மோசஸ் - விளாத்திகுளம், (35) நவரோஜி வீரபாண்டியன் - கோவில்பட்டி, (36) சௌந்தரவல்லி சாலமோன் - சாயர்புரம், (37) அலிஸ் குணசீலி - சாயர்புரம், (38) சுகுணாபாய் நோவா - சாத்தான்குளம், (39) ஜெயந்தி ராயப்பன் - கோவில்பட்டி, **சென்னை :** (40) லில்லி ஆல்வின் - தண்டையார்பேட்டை, (41) ஜெபா டேனியல் - குரோம்பேட்டை, (42) பேபி சகிலா - வியாசர்பாடி, (43) தியோடோரா ஜெபதுரை - வேளச்சேரி. **மதுரை :** (44) தெல்மா ஸ்டான்லி - முடக்கத்தான், (45) விஜயகுமார் - நாகமணி, (46) ஜோதிமணி அப்பாத்துரை - திருப்பாலை, (47) மேரி ஜெபராஜ் - அழகப்பன் நகர், (48) துரைராஜ் - பி&டி நகர், ***திருச்சி:*** (49) மார்கரெட் சத்யமூர்த்தி - தேவராயநகர், (50) ரெஜினா ரோஸ்லின் - லால்குடி, (51) லில்லியன் ஜோசப் - கருமண்டபம், (52) சுகந்தி ஜோன்ஸ் - திருச்சி, **கோவை :**(52) ஜேன் ஷர்லி - பீர்மேடு,(51) ஜெயபாரதி - சிங்காநல்லூர், (53) வளர்மதி - துடியலூர், (54) ஜான்சி தனராஜ் - சுந்தராபுரம், **கரூர் :** (55) சாலமன் சந்திரா - திங்களூர், (56) இந்திராணி அப்பாத்துரை - பள்ளப்பட்டி, (57) ஷீலா ஜாண்சன் - பள்ளப்பட்டி, (58) சசீயா - பள்ளப்பட்டி, (59) ஜெஸி மனோகரி - பள்ளப்பட்டி, (60) நேசமணி அப்பாத்துரை - சௌந்தராபுரம், **விருதுநகர் :** (61) ஜானி லீ - திருவள்ளுவர்நகர், ராஜபாளையம். (62) அலிஸ் ரெஜினாபாய் - அருப்புக்கோட்டை, **எல்லா மாவட்டங்கள் :** (63) வசந்தி ஜெயசீலன் - சத்துவாச்சாரி, வேலூர், (64) வில்லிராஜம் - உடுமலைப்பேட்டை, திருப்பூர், (65) சிந்தியா கிங்ஸ்டன் - கூடலூர், நீலகிரி மாவட்டம், (66) அந்தோணிதாஸ் - காட்டு பரமக்குடி, ராமநாதபுரம், (67) புனிதா பத்திரி -சித்தூர், (68) சிசிலி செல்வன் - கடலூர், (69) வசந்தா மார்கரெட் - மயிலாடுதுறை, நாகை மாவட்டம்.

கணவனும் மனைவியும் மிக அன்பாக குடும்பம் நடத்துவார்கள்!

பெற்றோரும், பிள்ளைகளும் மிகவும் பாசமுடன் ஒற்றுமையாக வாழ்வார்கள்!

கணவனின் தவறுகளை, மனைவி பொறுத்துக் கொள்வாள்!

மனைவியின் குற்றங்களை, கணவன் மன்னித்து மறந்து விடுவான்!

பிள்ளைகளின் தாறுமாறான வழிகளை, பெற்றோர்கள் தங்கள் அன்பான வார்த்தைகளால்! நடத்துதலால் சரியாக்கி விடுவார்கள்!

வயதான காலத்தில்- பெற்றோர்களின் பெலவீனங்களை உணர்ந்து, பிள்ளைகள் அவர்களுக்கு பெலனாக இருப்பார்கள்!

பரிசுத்த ஆவியானவர்-

இவர்கள் ஒவ்வொருவரோடும் வாசம் பண்ணி!

இவர்கள் குடும்பங்களை நடத்தும் போது!

இந்த குடும்பங்கள், இந்த பூலோகத்திலேயே, "குட்டி பரலோகம்" ஆக மாறிவிடும்.

பரலோக இன்பத்தை! இந்த பூமியில் இருக்கும்போது அவர்கள் அனுபவித்து மகிழுவார்கள்!

எங்கே தேற்றரவாளனாகிய பரிசுத்த ஆவியானவர் இருக்கிறாரோ, அங்கே ஒற்றுமை உண்டு, சமாதானம் உண்டு, மகிழ்ச்சி உண்டு.

அவர்களிடத்தில் பிசாசும் வராது,!

அவர்கள் குடும்பங்களில் பிரச்சினையும் வராது!

அவர்கள் குடும்பங்களில் பிரிவினையும் வராது!

* * * *

**''நித்திய மகிழ்ச்சி அவர்கள் தலையின்மேல் இருக்கும். சந்தோஷமும் மகிழ்ச்சியும் அடைவார்கள். சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம்''** (ஏசாயா 35:10)

## டிசம்பர்-2020 வேத புதையலில் முதல் பரிசு பெறுபவர்

**Sis. மார்கரெட் சத்தியமூர்த்தி, தேவராயநகர், திருச்சி.**

**ஆறுதல் பரிசு பெறுபவர்கள்**

**Bro. விஜயகுமார், நாகமணி-மதுரை.**
**Bro. ஜானிலி, இராஜபாளையம்-விருதுநகர்.**
**Sis. ஜேன்ஷர்லி மிராக்ளின், பீலமேடு-கோயம்புத்தூர்.**





## 2021 ஜனவரி மாத வினா விடைகள் ( IIகொரிந்தியர் )

(1) IIகொரிந்தியர் - 3:17 (2) IIகொரிந்தியர் - 10:18 (3) IIகொரிந்தியர் - 1:1 (4) IIகொரிந்தியர் - 12:7 (5) IIகொரிந்தியர் - 5:6 (6) IIகொரிந்தியர் - 9:7 (7) IIகொரிந்தியர் - 8:1 (8) IIகொரிந்தியர்- 13:5 (9) IIகொரிந்தியர் - 6:11 (10) IIகொரிந்தியர் - 4:18

## 2021- பிப்ரவரி வேத வினாக்கள் ( கலாத்தியர் )

1. எவைகள் ஒன்றுக்கு ஒன்று விரோதமாய் இருக்கிறது?
2. ஆகார் என்பது என்ன?
3. வேறொரு சுவிசேஷத்தை பிரசங்கிக்கிறவன் எப்படி இருப்பதாக வேதம் கூறுகிறது?
4. எத்தனை வருடங்களுக்கு பின்பு, பவுல் எருசலேமுக்கு போனார்?
5. ............. வந்த பின்பு நாம் ............... கீழானவர்களல்லவே - கோடிட்ட இடங்களை நிரப்புக.
6. எது ஆபிரகாமுக்கு நீதியாக எண்ணப்பட்டது?
7. தன் மாம்சத்திற்கென்று, விதைக்கிறவன் மாம்சத்தினால் ..................... வசனத்தை முடிக்கவும்.
8. ஆவியின் கனிகள் எவைகள்?
9. பவுல், பேதுருவுடன் எத்தனை நாட்கள் தங்கி இருந்தார்?
10. நீங்கள் எல்லாரும் கிறிஸ்து இயேசுவைப் பற்றும் விசுவாசத்தினால் தேவனுடைய புத்திரராயிருக்கிறீர்களே. இருப்பிடம் கூறுக.

இந்த மாத வேத புதையல் வினாக்கள் கலாத்தியர் - இருந்து கேட்கப்பட்டுள்ளது.

வினாக்களுக்கு பதில்களை - இந்த மாதம் 30ம் தேதிக்குள் எங்களுக்கு கிடைக்கும்படி அனுப்ப கேட்டுக்கொள்கிறோம்.

சரியான பதில்களை எழுதி குலுக்கல் முறையில் முதல் பரிசு பெறுபவர்க்கு, முதல் பரிசாக பரிசுத்த வேதாகமம் அனுப்பி வைக்கப்படும். மேலும் மூன்று போர்களுக்கு ஆறுதல் பரிசுகள் அனுப்பப்படும்.

பதில்களை அனுப்புகிறவர்கள் தங்களது விலாசத்தை தெளிவாக எழுதி அனுப்புங்கள்.

வேத புதையல்-ல் பங்கு பெற்று தேவனுடைய ஆசீர்வாதத்தை சுதந்தரித்து கொள்ளுங்கள்.

சென்ற - மாத வேத புதையலில் பங்கு பெற்று சரியான விடை எழுதி பரிசு பெறுபவர்களின் விபரம் அடுத்த மாத **மகிமை** இதழில் வெளிவரும்.

**பதில்களை நீங்கள் அனுப்ப வேண்டிய எங்கள் விலாசம்**

**வேத புதையல்**
**கர்த்தர் இயேசுவின் மகிமை**
**14/2, திருச்செந்தூர் ரோடு**
**பாளையங்கோட்டை - 627 002.**

## இது உங்கள் ஊழியம்

"கர்த்தர் இயேசுவின் மகிமை" என்னும் இந்த தேவ ஊழியம் இயேசுவை நேசிக்கும் எல்லோருடைய ஊழியமுமாகும்.

கடந்த பல ஆண்டுகளாக ஜெபத்துடன், மாதம் தவறாமலும், இடையிடையேயும், வருடந்தோறும் கடிதங்களையும், காணிக்கைகளையும் உற்சாகமாக அனுப்பி-

"மகிமை" ஊழியத்தைத் தாங்கி வரும் அன்பான குடும்பங்களை, தேவன் அறிவார்.

**''உற்சாகமாய் கொடுக்கிறவனிடத்தில், தேவன் பிரியமாய் இருக்கிறார்''** (2 கொரிந்தியர் 9:7) என்ற வசனத்தின்படி, தேவன் உங்கள் மேல் பிரியமாய் இருக்கிறார். இனியும் பிரியமாய் இருப்பார்.

இதை உங்கள் வாழ்வில் நீங்கள் பெறும் நன்மைகளின் மூலம் அறிந்து கொள்வீர்கள்! தேவன் தாமே! உங்களை ஆசீர்வதிப்பார் (2கொரிந்தியர் 9)

## பரலோகமே நம் சொந்தமே!

பூமிக்குரிய கூடாரமாகிய நம்முடைய வீடு அழிந்து போனாலும், தேவனால் கட்டப்பட்ட கைவேலை அல்லாத நித்திய வீடு பரலோகத்திலே நமக்கு உண்டு என்று அறிந்து இருக்கிறோம் - II கொரிந்தியர் 5:1

## "கர்த்தர் இயேசுவின் மகிமை"க்கு இன்டர்நெட் மூலம் காணிக்கை அனுப்ப வேண்டுமா?

"இன்டர்நெட் பாங்கிங் (Internet Banking) மூலம் "கர்த்தர் இயேசுவின் மகிமை" ஊழியங்களுக்கு காணிக்கை அனுப்ப விரும்புகிறவர்களுக்கு கீழ்க்கண்ட விபரங்களை தருகிறோம்.

"INDIAN OVERSEAS BANK" மூலம் அனுப்ப (இந்தியன் ஓவர்சீஸ் வங்கி)

| | |
|---|---|
| NAME | : KARTHAR YESUVIN MAGIMAI |
| BANK | : INDIAN OVERSEAS B ANK |
| BRANCH | : PALAYAMKOTTAI |
| ACCOUNT | : CURRENT ACCOUNT |
| ACCOUNT No | : 006702000000744 |
| IFSC CODE No | : IOBA0000067 |

மேற்கண்ட வங்கி கணக்கில் காணிக்கை செலுத்துபவர்கள் உங்கள் பெயர் மற்றும் விபரங்களை 9655165569 என்ற எண்ணில் தொடர்பு கொண்டு தெரிவிப்பீர்கள் என்றால், நாங்கள் உங்களுக்கு பதில் அனுப்ப வசதியாக இருக்கும்..

Published and owned by A.Samson Asir Raj, and printed by.A.Rajadurai Kirubakaran and printed at Raj Litho Press 23-A, S.N.High Road, Tirunelveli- 627 001 and Published at 14/2, Tiruchendur Road, Murugankurichi, Palayamkottai, Tirunelveli - 627 002, Editor : A.Samson Asir Raj

Karthar Yesuvin Magimai Tamil Monthly Magazine Registered with
RNI No : TNTAM / 2016 / 69933 Postal Reg No : TVL / 071 / 2020 - 2022
Posted on 1st & 2nd of every month
Date of Publication 01-02-2021: office of Posting H.P.O. Palayamkottai

## மகிமையில் தொடர்பு கொள்ளுங்கள்

உங்களுடைய அற்புதமான சாட்சிகளை வெளியிட -
உங்களுக்கு "கர்த்தர் இயேசுவின் மகிமை" அனுப்ப -
உங்கள் சுகம், சமாதானம், ஆசீர்வாதங்களுக்காக ஜெபிக்க -
உங்களுடைய நன்றி காணிக்கைகளை சந்தாக்களை அனுப்ப -

நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய
**எங்கள் விலாசம் :**

**கர்த்தர் இயேசுவின் மகிமை**
14/2, திருச்செந்தூர் ரோடு,
பாளையங்கோட்டை, திருநெல்வேலி - 627002

ஜெப தொடர்புக்கு :
**Cell : 96551 65569**

உங்கள் கடிதங்களிலும், உங்கள் M.O.க்களிலும் உங்கள் முழு விலாசத்தையும் குறிப்பிடுங்கள்.
மகிமை ஊழியத்திற்கு காணிக்கை அனுப்பும் போது
**கர்த்தர் இயேசுவின் மகிமை**
என்ற பெயரில் மட்டுமே அனுப்புங்கள்

இயேசுவை ஏற்றுக் கொள்ளாதவர்களும், இயேசுவை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற மனவிருப்பம். ஆத்மபாரம் உங்களுக்கும் இருக்கும் என்றால் இந்த மகிமை ஊழியத்தை, உங்கள் தினசரி ஜெபத்தினாலும், உங்கள் மாத காணிக்கைகளினாலும் தாங்குங்கள்

## வாட்ஸ் ஆப்-ல் தொடர்பு கொள்ளுங்கள்



கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!
நீங்கள் உங்கள் சாட்சிகளையும் உங்கள் ஜெப விண்ணப்பங்களையும், பின்வரும் எங்கள் வாட்ஸ்-அப் நம்பரில் எங்களுக்கு அனுப்பி வையுங்கள்.

மேலும் "மகிமை" ஊழியங்களுக்காக நீங்கள் எங்களது வங்கிக் கணக்கில் காணிக்கை செலுத்தி இருந்தால்,

உங்கள் பெயர் மற்றும் உங்கள் முகவரியை எங்கள் வாட்ஸ்-அப் நம்பரில் எங்களுக்கு தெரியப்படுத்துங்கள்.

நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய
எங்கள் வாட்ஸ்-அப் நம்பர்
**96551 65569.**

சகோ. R. அம்புரோஸ் அவர்களின் சிந்தனை வரிகள்

## இவ்விதமாய் துதியுங்கள்

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே!
உம்மை ஸ்தோத்திரிக்கிறோம்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கே
ஸ்தோத்திரம் உண்டாவதாக! -ஆமென்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கே
மகிமை உண்டாவதாக! -ஆமென்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின்
பரிசுத்த நாமத்திற்கே மகிமை உண்டாவதாக!
-ஆமென்.

****

**கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தைச் சொல்லித்தான் ஸ்தோத்திரம் செய்ய வேண்டும்**
- எபேசியர் 5:20

****

**என் ஆத்துமாவே . . என் முழு உள்ளமே ...**
"பரிசுத்த நாமத்தை" ஸ்தோத்தரி.
-சங்கீதம் 103:1

**To.**

CH/ 118
Mr. K. John,
No: 4 First floor,
14 Vyasar street,
Tambaram East,
Chennai - 600 059.

IF UNDELIVERED PLEASE RETURN TO

KARTHAR YESUVIN MAGIMAI
14/2.TIRUCHENDUR ROAD
PALAYAMKOTTAI
TIRUNELVELI-627002
TAMIL NADU-SOUTH INDIA